# அன்புமக்களே!

தமிழ்க் கத்தோலிக்க மாதாந்த வெளியீடு சித்திரை 2011. ஒளி 16. கதிர் 04
TAMIL CATHOLIC MONTHLY PUBLICATION. April 2011. Year 16. Vol 04.





தந்தையே என் ஆவியை உம் கையில் ஒப்படைக்கிறேன். ஆண்டவரே உமது ஆவியை அனுப்பி மண்ணகத்தின் முகத்தைப் புதுப்பிக்கின்றீர்.

# ஆண்டவர் உயிர்த்தார் அல்லேலூயா!


## ஸ்தாபிதம்

ஆனிமாதம் 1995

முகவரி



2387 Eglinton Ave East Unit # 05
Scarborough. On. M1K 2M5
E-mail:- dtpasto

தொலை பேசி (416) 752 - 6999
தொலைநகல் (416) 628 - 4119



**தயாரிப்பு + வெளியீடு**
கனடாத் தமிழ்க் கத்தோலிக்க சங்கம்..

**ஆசிரியர் குழு**
பண்டிதர் அலெக்ஸாந்தர் செல்வராசா
திரு தோமாஸ் டேவிட்
சகோதரி மரினா அந்தோனிப்பிள்ளை

**ஆலோசனைக் குழு**
அருட் தந்தை வார்கிஸ் சகாயறாஜா
அருட் தந்தை அந்தோனிப்பிள்ளை தோமாஸ்
அருட் தந்தை திபுசியஸ் சைமன்

**தொழில் நுட்ப உதவி**
திரு தோமாஸ் இருதயநாதன்
செல்வி மரினா சவுந்திர நாயகம்.

**விநியோகஸ்த்தர்கள்**
கனடாத் தமிழ் கத்தோலிக்க சங்கம்
தன்னார்வத் தொண்டர்கள்.

**கிடைக்கும் இடங்கள்**

**றொறொன்ரோவில்:-**
புனித அந்தோனியார் தேவாலயம்
லூர்துமாதா தேவாலயம்

**ஸ்காபரோ:-**
புனித மரிய கொறற்றி தேவாலயம்

**ஜேன்&பிஞ்:-**
புனித ஒகஸ்றின் தேவாலயம்

**மிஸிசாக்காவில்:-**
சிற்றி சென்றர் வியாபார
ஸ்தாபணங்களில்

**மாக்கம்:-**
தோமாஸ்மோர் தேவாலயம்
பொனிபஸ் தேவாலயம்

**டொன்மில்ஸ்:-**
புனித 23ம் அருளப்பர் தேவாலயம்

**தமிழ் கத்தோலிக்க புதுவாழ்வுக் குழு**

**தமிழ் மொழிகற்கும் வகுப்புகள்**
**மெக்கா சிற்றி வர்த்தக ஸ்தாபனங்கள்**

**ஆதரவு**

**கனடாத் தமிழ் கத்தோலிக்க சங்கம்.**


உலகெங்கும் கிறிஸ்த்தவர்கள் ஆண்டவர் இயேசுவின் பாடுகள், மரணம், உயிர்ப்பு எனும் மறைநிகழ்ச்சிகள் அடங்கிய பாஸ்க்காப் பெருவிழாவிற்கு ஆன்மீக ரீதியாக தம்மை ஆயத்தம் செய்து கொண்டாடுகின்றனர் சித்திரை மாதம் நான்காம் வாரத்தில் பரிசுத்த வார வழிபாடுகளில் பங்கேற்றபின் உயிர்ப்பு விழாவை கிறிஸ்த்தவ உலகம் பெரும் மகிழ்ச்சியுடன் கொண்டாடுகின்றது. இத்தருனத்திலே ஈழத்தில் சமாதான சக வாழ்வு சிறக்க உயிர்த்தநாதரை வேண்டுவோம்.

ஐக்கிய நாடுகளின் பிரதிநிதிகள் இலங்கையில் நடந்தேறிய போர் நீதியின முறையில் நடைபெறவில்லை என்று இருநூற்றி இருபது பக்கம் நிரம்பிய ஏடுகளின் மூலம் ஈழ மக்களின் பல ஆண்டுகால கொடிய போரின் நலையை விளக்கி வரப்போகும் அமைதிக்கு வித்திடப்படுகிறது என்ற ஈழ மக்களின் பெரு மூச்சுடன் இந்த உயிர்ப்பு விழாவும் நடைபெற்றுக்கொண்டு இருக்கிறது.

இதேவேளை இயேசுவின் பயணத்தின் பாடுகளும் மரணமும் உயிர்ப்பும் உத்தானமும் பிரிக்கப்பட முடியாதவை பாடுகள் மரணம் என்ற கடின அனுபவத்தின் வழியாக இயேசு உயிர்ப்பையும் உத்தானத்தையும் அடைந்துகொண்டார்.

இயேசு மனித குலத்தில் வாழ்ந்து மனிதப் பாடுகளை அனுபவித்தமையால் பசி, தாகம். கண்ணீர், கவலை, சிறை, சித்திரவதை, அனைத்தையும் ஏற்றுத், தாங்கிக்கொண்டார்.

எமது பாஸ்க்காப் பயணத்தினத்திலும் துன்பங்களும் துயரங்களும் தவிர்க்கப்பட முடியாதவை. எமக்கு ஒரு பாஸ்கா விடுதலை உண்டு என்றால் அது நாம் அனுபவித்த, அனுபவித்துக் கொண்டிருக்கிற பாடுகளின் விளைவாகவே எமக்குக்கிடைக்கும் வாழ்க்கை அனுபவங்களில் இயேசு எம்மோடு இருக்கிறார் ஆகவே ஆண்டவரின் உயிர்ப்பு ஒரு வரலாற்று நிகழ்வு மட்டுமல்ல வருடத்திற்கொருமுறை புனித வாரத்தில் வந்து போகும் நினைவு விழா மட்டுமல்ல. மாறாக அது ஒரு வாழ்க்கை அநுபவம் ஒவ்வொரு கிறிஸ்த்தவனும் அன்றாட வாழ்வில் வாழ வேண்டிய ஒரு வாழ்க்கை நெறி.

ஆண்டவர் உயிர்த்து விட்டார் என்று அல்லேலூயா பாடும் நாம் ஒவ்வொருவரும் பாவ வாழ்விலிருந்து, புதுவாழ்வுக்கு உயிர்த்தெழுந்துள்ளோமா? என்று கேள்விகள் கேட்டு பதில் தேட வேண்டும்.

பொறாமை, வஞ்சகம், துரோகம், வெறுப்பு போன்றவற்றிலிருந்து எழுந்து அன்பு, பொறுமை, மன்னிப்பு போன்ற குணாதிசயங்களில் வாழ்வது உயிர்த்த வாழ்வு, குடி, காமம், சூதாட்டம், களியாட்டம், களவு, பொய் இவற்றிலிருந்து விடுபட்டு புதுவாழ்வு காண்பது உயிர்த்த வாழ்வு. ''தன்னைப்போல் மற்றவரை நேசித்து சேவை செய்வது புதுவாழ்வு.

இதை வாசித்துக் கொண்டிருக்கும் நாம் ஒவ்வொருவரும் நம் வாழ்வில் உயிர்த்த இயேசுவின் அந்த உயிர் வாழ்வு இருக்கிறதா? பாவத்திலிருந்து நான் விடுதலை பெற்று அனைவருக்கும் அன்பு செய்து பணி வாழ்வு வாழ்கின்றேனா? அவ்வாறு நான் வாழ்ந்தால் ஆண்டவர் என்னை உயிர்த்தெழச் செய்வார்: நானும் உயிர்த்து விட்டேன்

உயிர்ப்பின் மகிழ்ச்சியை அனுபவித்த நான் யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என மற்றவர்கள் அதில் பங்கேற்க பணிபுரிய பழகி உயிர்த்த இயேசுவை மற்றவர்கள் என்னில் காண சாட்சி பகர்ந்து முன் மாதிரியான வாழ்வு வாழ வேண்டியது என் கடமை என்பதை உணர்ந்து செயல்படுவோமாக.

இந்த வருடம் பெரிய வெள்ளிக்கிழமை இறைவன் இயேசுவின் மரணத்தை நினைவு கூரும்போது தமிழ் பல்லாயிரக்கணக்கில் இரண்டாயிரத்தி ஒன்பதாம் ஆண்டு முள்ளி வாய்காளில் ஆகோரத்தனமாக இறந்த மக்களை நினைவு கூறுவதுடன் அவற்றில் இருந்து அறை குறையான உயிர் தப்பிய மக்களின் அவலங்களையும் அவர்களின் துன்பங்களையும் நினைவு கூர்ந்து இறைவன் கையில் ஒப்புக்கொடுப்போமா.

இந்த வருடம் நாம் இறைவன் இயேசுவின் பாடுகள் மரணம் உயிர்ப்பு அடங்கிய பாஸ்க்காவுடன் நம் இதயங்களில் ஏற்படும் துன்பங்களையும் நமது சகோதரர்களுடன் சேர்ந்து இறைபிரசன்னத்தில் ஒப்புக்கொடுப்போம்.

இயேசுவின் உயிர்ப்பு பெருவிழா வாழ்த்துக்கள் நேசக் கரங்களை நேர்த்தியாய்ப் பேருலகில் நீட்டிக் குதூகலிக்க நின்னருளை வேண்டுகிறோம் காட்டும் இறையருளே காண். எல்லாம் இயேசுவோடு என்றும் மகிழ்வோம்.

தோமாஸ் டேவிட்
ஆசிரிய பீடம்.

## இயேசுவின் உயிர்ப்புத்தரும் உன்னத செய்தி

அன்பு மக்களே!

``உயிர்ப்பும் உயிரும் நானே என்னில் விசுவாசம் வைக்கின்றவன் மரித்தாலும் பிழைப்பான். ஊயிரோடிருந்து என்னில் வாழ்ந்து, என்னை விசுவசிக்கிறவன் என்றும் இறப்பதே இல்லை. (அருள் 11:25-26)

இயேசுவே வழி, ஒளி, உண்மை என விசுவசித்து, நம்பி, வாழ்ந்தால் வீடு பேறடைவது மிக இலகுவாகும் என்பது மேலே உள்ள விவிலிய வாக்குத் தரும் உயிர்ப்பின் செய்தியாகும். இயேசுவும் வாழ்வும் வழியும் எமக்கோர் அரிய அகராதி. சுவிஷேஷம் கூறும் இயேசு வாழ்வைப் புரட்டிப்பார்த்தால் அதிலே எம்முடைய வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்க்கும் வழி காணலாம். ``அன்பின் வழியது உயிர் நிலை என இயேசு வாழ்ந்து காட்டுகிறார். இன்னா செய்தார்க்கும் இனியவை செய்தவை மலைப் பிரசங்கம் கூறுகிறது. இறைவழி சேவை செய்வது, ஆணவத்தை அடக்குவது என்பதை இறைமகன் சீடர்தம் காலைக் கழுவித் துணியால் துடைத்து நிலத்திருந்து முத்தமிடுவதால் காணலாம் மாதாவின் வேண்டுதலால் கானான் ஊர்க் கலியாணத்திலே செய்த புதுமை அன்னை மரியையும் வேண்டி அருள் பெறலாம் என்பதைக காட்டுகிறது. பிதாவே இவர்கள் அறியாமல் செய்கிறார்கள் என்பது, நாம் அறியாமல் செய்யும் செய்கைகள் மற்றவரைப் புண்படுத்தலாம், அதற்காவும் ஆண்டவனை வேண்டித் தூய்மை வழி நடக்கலாம், நாடலாம் என்பது அதன் ஊட்டம் .

**அஞ்சாதே!**

நான் உன்னை மீட்டுக் கொண்டேன் உன்பெயரைச் சொல்லி உன்னை அழைத்தேன். நீ எனக்குரியவன் எசா 43:1 இக்கூற்று உயிர்ப்பின் தகைமை எம்மோடு இறைவனை ஒன்றாக்குகிறது. இறைவன் உன்னை மீட்பர் என்ற துவைத நிலையிலிருந்து, நீ எனக்குரியவன் என்ற அத்வைத நிலைக்கு அழைத்துச் செல்கிறது. உயிர்த்த இயேசுவில் வாழ்வோம் உயிர்ப்பு விழா இயேசு இறை குமாரன். இறைவன் என்பதைப் பறைசாற்றுகிறது. இயேசுவின் வார்த்தை எமக்குத் தஞ்சமும் தயைவையும் தந்து மோட்ச பேற்றையும் அளிக்கிறது.

இயேசு இருக்கப் பயமேன் இயேசு தந்த தேவ நற்கருணை இயேசுவை எம்மில் வழி சமைத்துள்ளது. இயேசு எம்மிலும் நாம் அவரிலும் வாழ நானே உயிர்ப் பும் உத்தானமும் என்ற இயேசு வழியாகி, ஒளியாகி உலகமாந்தர் அனைவருக்கும் வாழும் தத்துவம் தந்து, எல்லோரும் காணக் கைகளை உயர்த்தி வழிகாட்டி மீட்டும் தெய்வம் ஆகிறார்.

பெத்தானியாவை நோக்கி அவர்களைக் கூட்டிச் சென்று, கைகளை உயர்த்தி அவர்களுக்கு ஆசி கூறினார். அப்படி ஆசி கூறுகையில் அவர்களை விட்டுப் பிரிந்து வானகத் திற்கு ஆரொகணமானார். அவர்கள் தெண்டனிட்டு வணங்கிப் பெரு மகிழ்ச்சியுடன் யெருசலேம் திரும்பினார். கோயிலில் கடவுளை இடைவிடாமல் போற்றிப் புகழ்ந்து கொண்டிருந்தனர் லூக்கா 24: 43-50 மாற்: 16:19,20**“அன்பு மக்களே” இறை ஆசிவேண்டுகிறது**

## ‘‘மரணத்தை வென்ற மாபெரும் வீரர்’’

உலகை உருவாக்கிய உன்னதர் தம் சாயலைக் கொண்ட மனிதனுக்கு படைப்பின் அருங்கொடையாக பகுத்தறிவைக் கொடுத்தார். அந்த பகுத்தறிவினால் படைத்தவரையே மறந் தான் மனிதன். ஆம் ஆண்டாண்டு காலமாய் வாழ அருள் உயிரை பெற்ற ஆதிப்பெற்றோர் இன்மைக்கு காலமாய் வாழ அருள் உயிரை பெற்ற ஆதிப்பெற்றோர் இன்மைக்கு இன்பந் தரும் ஆசைகளின் பொருட்டு. அலகையின் சொற்கேட்டு ஆதியும் அந்தமுமாகிய ஆண்டவனுக்கு அடிபணியாது இருந் தனர். இயற்கை கனியுண்டு இறைவனின் இரக்கத்தை அறியா மல் முடிவில்லா வாழ்வளிக்கும் வானரசின் வசந்தத்தை பெறும் பாக்கியத்தை இழந்தனர். வார்த்தையால் உலகை வடித்த வல் லவருக்கு தலைவணங்காது அற்பமான ஆசைகளின் தலை வனாகிய அலகையின் சொல்லுக்கு அடிபணிந்து அகிலத்தினில் வாழ அடியெடுத்து வைத்தனர். தன் மகன் தடம்மாறிய போதும் தந்தை மனம் நித்தம் தவித்துக்கொண்டிருக்குமல்லவா? ஆதே போல்தான் தந்தையைவிட தலைசிறந்த வானதந்தை தம்மை விட்டு விலகியோடும் மந்தையைக்கூட்டி சேர்ப்பதற்காக விண்ண ரசை நிறுவி அதில் இம்மந்தைக் கூட்டம் வியாபித்திருக்க அன்னைமரி மைந்தனாக அகிலத்திற்கு அனுப்பினார் அற்புதர் இயேசுவை.

இன்று உலகில் பகுத்தறிவினால் பாரினில் பட்டம் பெற்றவர்கள் பல கோடி உலகை அடுத்துள்ள உடுக்களைக்கூட புறம்பார்த்து புகழ்பெறுகின்றனர். மண்ணிலும், கடலிலும், விண்ணிலும் ஆராய்ச்சிகள் செய்த அறிஞர் எத்தனைபேர். ஆயதபலத்தால் அயல நாடுகளைதன் ஆதிக்கத்துக்குள் கொண்டுவந்த அரசர் கள் எத்தனை ஆளும் ஆசைக்காக அகிலத்தை அழித்த அரக் கர் எத்தனை. உடல் ஊக்கத்திற்கு உடற்பயிற்சி ஆனால் உலகசாதனைக்காக உயிர் துறந்தோர் எத்தனை. மதசாஸ் திரங்களை மதிக்காமல் சாதனைபடைக்க, சமர்செய்த சதிகாரர் எத்தனை. நாட்டுக்காக, நலத்திற்காக சொந்திற்காக, சுதந்திரத் திற்காக சொந்த உயிரையே கொடுத்தோர். எத்தனை அரிதான உயிரையே பெரிதாக கருதாது போரினால் மாண்டவர் எத்தனை. இவர்கள் எல்லோரும் தரணியில் புகழ் பெற்றவர்கள். இவர்களில் பெரும்பாலும் சாதனை, புகழுக்காக புறப்பட்டவர் கள். பாவம் செய்ததால் இறந்தார்கள். ஆனால் அந்த பாவிக ளுக்கு தண்டனை வராமலிருக்க உத்தமமானவர் வைக்கும் உலகில் பாவிகளுக்காக பரமன் உயிரை அளித்தார். பாவிகள் மரணத்தண்டனையிலிருந்து விடுதலையடைய தம் உயிரை கையளித்தார் இரப்போருக்கு கூட இல்லையென கூறும் உல கில் சிதைவுற்ற சனங்களுக்காக சிலுவை மரமேறினார். ஆம்! அவர்தான் எம் இறைமகன் இயேசு கிறிஸ்து உலகில் அனை வரும் வந்தார்கள், வாழ்ந்தார்கள். இறந்தார்கள் அவ்வளவு தான். ஆனால் தழுவிய மனுமகன் மறுபடி எழுந்தார் மர ணத்தை வென்றார். மனுகுலத்தை மீட்டார். கணனியால் இன்று எத்தனையோவிதமான கண்டுபிடிப்பிப்புகள் ஆனால் மரணத்தை தடுத்தாக இதுவரை எத்தகவலும் இல்லை ஆனால் எம்மீட்பர் வார்த்தையால் மனுவானார். உயிர்ப்பால் விண்ணில், மண்ணில் மகிமை பெற்றார்.

இன்று உலகமெங்கும் உணர்ச்சிக்கரமாகத் திருச்சபை திகழ இவர் உயிர்ப்பே காரணம் இல்லாவிட்டால் எமது விசவாசம் பொய்யாக் கப்பட்டிருக்கும். போலிப்போதகர்களினால் சாதனைப் படைத்தவர்கள் சாவில் மூழ்கினார்கள். ஆனால் அச்சாவையே வென்றார் சாந்தமகன். இன்று உலகில் ஒளியாக விளங்குகின் றார். பாவிகளாகிய நாம் அவரின் மரணத்தினால் இறந்தோம் உயிர்ப்பால் புத்துயிர் பெற்று புதுவாழ்வு வாழ்கிறோம். கடவுளி டமிருந்து விலகியிருந்த நாம் இயேசுவின் உயிர்ப்பால் உற வாடும் பாக்கியம் பெற்றோர். ஏனவே இறைவனுக்கு ஏற்புடை யவர்களாக வாழ்வது எமது கடமையல்லவா! இதுவரைகாலம் மரணத்தை ஜெயித்த்ததாக உலகில் எவருமேயில்லை. எனவே எம் பாவங்களுக்காக இரத்தம் சிந்திய அந்த மரணத்தை வென்ற மாபெரும் வீரரின் பாதம் பணிவோம் உயிர்ப்பால் மகிமைபெற்ற உன்னதரின் பாதையில் நடந்து மண்ணில்

மறைசான்று பகர்வதோடு மகிமை நிறைந்த இறைவனின் விண்ணரசின் சோலையை அலங்கரிக்கும் அல்லி மலர்களா வோம். துன்பங்களை இன்பமாக ஏற்று தூயவன் வழிசெல் வோம். நற்செய்தியை உலகிற்கு அறிவிக்கும் நல்லாசானாக மாறி மகிமை நிறைந்த இறைவனின் மக்களாவோம். ஆகவே மரணத்தை வென்ற மாபெரும் வீரரின் வாழ்வில் இன்றே இணைவோம்.

செல்வி நீக்கலஸ் நிலாகினி
நாட்சிக்குடா தமிழ் ஈழம்.

## உயிர்த்த இயேசு எமக்குப் புதுவாழ்வு அளிப்பார்

மானிட மீட்சிக்காக இறைவனால் எமக்களிக்கப்பட்ட இறைமகன் இயேசு தாம் பூவுலகிற்கு வந்த நோக்கும் நிறை வுறும் காலம் அண்மித்த வேளையில் தமது சீடர்களுக்கு அதனை வெளிப்படுத்தினார். இயேசு தாம் பாடுகள் பலபடுவ தற்கு முதல் நாள் இராப்போசன விருந்தின் பொழுது தமது சீடர்களின் பாதங்களைக் கழுவி, தலைவர்கள் அதிகாரம் பண் ணுகிறவராயிராது சேவையாளர்களாயிருக்குமாறு அறிவுறுத் துகிறார். பின்பு அப்பத்தையும் இரசத்தையும் எடுத்து இறை புகழ் கூறி அதனை அவர்களிடம் கையளித்து, இது உங்களுக் காகச் சிந்தப்படும் என் சரீரமும் இரத்தமும், இதனை என் நினைவாகச் செய்யுங்கள் எனக்கூறி திவ்விய நற்கருணையை ஏற்படுத்தினார்.

இராப்போசன விருந்தின் பின் செபிப்பதற்காக ஒலிவ மலைக்குச் சென்ற இயேசு, சீடர்களைச் சோதனைக் குட்படா தபடி செபியுங்கள் எனக்கூறி தாம் சிறிதுதூரம் விலகிச்சென்று செபிக்கிறார். எமது பாவங்களின் கனம் காரணமாக மிகுந்த வேதனைப்படும் இயேசு, வியர்வை இரத்தத் துளிகளாக நிலத் தில் விழ, கூடுமானால் இப்பாத்திரம் என்னைவிட்டகலட்டும் ஆனால் என் சித்தப்படி அல்ல உம் சித்தப்படியே எனத் தந்தை யிடம் வேண்டி தமது கீழ்படிதலை வெளிக்காட்டுகிறார். தமது சீடர்களி லொருவனான யூதாசினால் முத்தமிட்டுக் காட்டிக் கொடுக்கப்படும் இயேவைச் சேவகர்கள் கைதுசெய்ய முற்படு கையில் பேதுரு வாளை எடுத்து சேவகன் ஒருவரின் காதை வெட்டினார். அவ்வேளையிலும் அவனது காதை சொஸ்தப்படுத் தியும், சேவகர்களிடம் நீங்கள் என்னைக் கைது செய்ய வந்தால் இவர்களைப் போகவிடுங்கள் எனக்கூறியும் தமது பிறரன்பை வெளிப்படுத்தினார்.

தவக்காலம் எமது வாழ்வைச் சீரமைத்து உளமாற்றம் பெற்று இறைவனை அடைவதற்கு வழிகாட்டும் காலம். ஆபிவி ருத்திக்கும் சமாதானத்திற்குமான ஸ்தாபனங்கள் இக்காலத்தில் உலக மக்களுக்கு நன்மை பயக்கும் அபிவிருத்தி, சமாதானத் திட்டங்களைச் செயல்படுத்த முனைகிறார்கள். கத்தோலிக்க மறைமாவட்டங்களும் இச்செயல்பாட்டுத் திட்டங்களோடு இணை ந்தும் தனித்தும் பல திட்டங்களை உருவாக்கிச் செயல்படுவ தோடு ஆன்மாவின் உளமாற்ற வழிகளையும் மேற்கொள்கிறார் கள்.

இன்று நாம் வாழும் வாழ்வு நமது மூன்றாம் உலகநாட்டு சகோதரர்களான பலருக்குக் கிடைப்பதில்லை. குறிப்பாக எமது ஈழநாட்டு மக்களுக்குக் கிடைப்பதில்லை. நாளாந்தம் எமது மக்களுக்கு வழங்கப்படும் அத்தியாவசிய உணவுப் பொருட்களின் கட்டுப்பாடு, தட்டுப்பாடு, விலைஉயர்வு மக்களின் அன்றாட வாழ்வை அல்லல் படுத்துவதையும் ஏன் மரணத்தின் முடிவுக்கு இட்டுச் செல்வதையும் சமூக ஊடகங்கள் வாயிலாக நாம் அறிகிறோம்.

நமது தவக்கால உளமாற்றம் காரணமாக நாம் மேற்கொண்ட சிறு சிறு ஒறுத்தல் முயற்சிகளினால் ஏற்பட்ட சேமிப்பை, நமது துன்புறும் மக்களுக்கு வழங்க முற்பட வேண்டும். அப்பொழுது தான் எமது தவக்கால வாழ்வு பயனு டையதாகும். இத்தவக்காலத்தின் மூலம் எம்மிடையே மன்னிக் கும் மனப்பான்மையையும், அயலவனில் இறைவனையும் காண எம்மைப் பழக்கப்படுத்திக் கொண்டால் உயிர்த்த இயேசுவின் மூலம் புதுவாழ்வு பெற்றவர்களாவோம்.

**இம்மானுவேல் யோசேப்**

***இயேசுவின் உயிர்ப்பொளி பரவட்டும். இதயங்களில் இருள் விலகட்டும். மாசுகள் மனக்கவலைகள் மறையட்டும். மங்கல கீதங்கள் முழங்கட்டும்***

***வாசக நெஞ்சங்களுக்கு உயிர்ப்பு விழா வாழ்த்துக்கள் உரித்தாகுக.***

***தமிழ் வாசக அன்பு நெஞ்சங்கள் அனைவருக்கும் சித்திரைப் புத்தாண்டு வாழ்த்துக்கள்***

## புாப்பரசர் 16ம் ஆசீர்வாதப்பர்

இந்த வருடம் பாஸ்கா காலம் கத்தோலிக்கருக்கும் ஓதெடெக்ஸ் கிறிஸ்த்தவர்களுக்கும் புரட்டஸ்த்தான் கிறிஸ்த்தவர்களுக்கும் யுதர்களுக்கும் ஒரே காலப்பகுதி யில் வந்து நிறைவேறுவதை அவதானிக்கக் கூடியதாக வுள்ளது

பரிசுத்த பாப்பரசர் 16வது ஆசீர்வதப்பர் குருத்தோலை ஞாயிறு அன்று உலக மக்களுக்கு அனுப்பிய செய்தி விஞ்ஞானிகள் உலகம் இறையில் விசுவாசத்திற்கு எதிரான கருத்துக்களைக் கொண்டு அசுத்த ஆவியின் தன்மைகளை தாங்கி உலக மக்களின் வாழ்வில் நெருக்கடிகளை உருவாக்கிய வண்ணமிருக்கிறார்கள் உதாரணமாக இயற்கை வழங்களை அசுத்தப்படுத்தி அவைகளின் தூமைகளைகெடுத்து மக்களின் வாழ்வில் தாம் யாவற்றையும் ஆதிக்கம் செலுத்த முடியுமென்ற கருதுகளை பரப்பினாலும் அவைகளினால் எது வித உன்மையும் இன்றித் தவிக்கிறார்கள் காரணம் இயற்கை கள் அவர்கள் உருவாக்கிய கருவிகளால் அவர்களுக்கும் மக்களுக்கும் அனர்த்தங்கள் எதிர்பார்த்ததை விட அதிகமாகவே உள்ளது இதனால் கட்டுப்பாட்டுக்குள் இயற்கையைக் கொண்டு வரமுடியாமல் தவிக்கிறார்கள் இவற்றுக்கு உதாரணம் யப்பானில் கடந்த மாதம் நடந்த பூகம்பத்தினால் ஆளிப்பேரலையும், அதைத் தொடர்ந்து (நீயூக்கிளியர்) அனு ஆயுதச் சாலைகளின் கதீர் வீச்சுகள் பல இலச்சம் மக்களின் உயிருக்கு ஆபத்தை உருவாக்கும் நிலையில் இருந்தமை போன்ற காரணங்களை மக்கள் உணரவேண்டும் இறைவனின் இயல்பை இறைவனால் மட்டும்தான் இயற்ற முடியும் ஆகவெ இறைவனில் வைத்திருக்கும் நம்பிக்கையும் விசுவாசமும் இந்த காலகட்டத்தில் மிகவும் அவதனாமாக உற்றுநோக்கி நாம் உள்வாங்கிக்கொள்ள வேண்டும். இறை விசுவாசம் இக்கால கட்டத்தில் மிகவும் அவசியம் என்பதை உணரவேண்டுமென்றார்

**நேரிசை வெண்பா.**

**இயேசுவே எங்கள் வழியே ஒளியே
நேசமாம் சத்தியமே நேசிப்போம் நேசரை
என்பது வணக்கம் இனியேது எம் தஞ்சம்
நன்கறிந்தே இயேசுவிடம் சார்.**

# ஒரு மரண தண்டனைக் கைதியின் கடைசி இரவா....? தவக்காலம்

ஒரு மரண தண்டனைக் கைதியின் கடைசி இருவ மிகவும் கொடூரமானது. ஏரிமலைக் குழம்பிற்குள் நீச்சலடிப்பு போல் உடலும் மனமும் வலிக்கும் தன் பாவம் .குற்றம் அனைத்தையும் நினைத்து வெதும்பி அழுவான் கண்ணீர் சிந்துவான்.... இருந்தும் என்ன பயன்? நாளைய சூரிய உதயம் தான் அவன். தன் வாழ்வில் காணப்போகும் கடைசி உதயம் .அவனுக்கு சாவு நிச்சயம்.விடுதலை கிடையாது.

ஆனால் "தவக்காலம் இன்னும் உனக்கு வாழ்வு இருக்கிறது" என்று சொல்லும் காலம். " நான் உனக்காக உயிரைக் கொடுக்கும் அளவு உன்னை அன்பு செய்கிறேன். என்று உறவு மலரும் காலம். தவக்காலம் ஒரு பாலைவன அனுபவத்திற்கு அழைக்கிறது. இந்த உலகில் எல்லாம் கிடைத்தால் கடவுள் வேண்டாப் பொருளாக மாறிவிடுவார். இதனால் தான் உலகப் பொருட்களின் சுமையை துறந்து உண்மைப் பொருளான தன்னை தேடுமாறு கடவுள் அழைக்கிறார். உலகச் செல்வங்களுள் நான் மூழ்கிக்கிடக்கும் வரை பாலைவன அனுபவம் சாத்தியமற்றது.

தேடல் உள்ள உயிர்களுக்கே தினமும் பசியிருக்கும். தேடல் என்புத உள்ளவரை வாழ்வில் ருசி இருக்கும்" இதுவரை நாம் ஒய்வு இன்றி .போதிய உறக்கமின்றி. நீங்கள் வரும் வரை அவலோடு காத்திருக்கும் அன்பு மனைவிக்கு ஒரு புன்னகைபுரிய நேரமின்றி .தேடினீர்கள் .பொருள் .பணம். பட்டம். புகழ்....களியாட்டம்..... எதுவுமே உங்களுக்கு ஆறுதல் தரவில்லை. நிம்மதி தரவில்லை.ஆனந்தக் குதுாகலம் தரவில்லை.எனவே தான் அன்புள்ள தந்தை உங்கள் பரிதாப நிலை கண்டு உங்களை அழைக்கிறேன்."என்னைத் தேடு சகலமும் உன்னைத் தேடி வரும்" என்கின்றார்.இதையே இறைவாக்கினர் ஆமோஸ் மிக அழகாகச் சொல்லுவார்.
"ஆண்டவரைத் தேடுங்கள் நீங்கள் வாழ்வீர்கள்" (ஆமோ: 5:6)

தவக்காலம் கடவுளாடு தனித்திருக்கும் காலம்.மிஞ்சியிருக்கும் வாழ்க்கையை அச்சமின்றி ஆனந்தமாய் வாழ ஆண்டவர் இயேசு செய்துத போல 40 நாள் ஆண்டவரோடு தனித்திருங்கள். பழைய பாவங்கள் கழைந்து புதிதாய் பிறக்க ஆண்டவரோடு தனித்திருந்து சக்தி பெறுங்கள்.

இது மன மாற்றத்தின் காலம் நோய் முற்றிவிட்ட குணமாக்க முடியாத புற்றுநோயாக மாறிவிடாதிருக்க காலத்தோடு தரப்படும் அழைப்பு. "சுடலை ஞானங்களும் .கண் கெட்ட பின் சூரிய நமஸ்காரமும் பயனற்றது மகனே' என்று சொல்லி சக்கேயு போல லேவி போல முழுதாய் மாறு என்கிறது இக்காலம் இம் மன மாற்றத்திற்கு நோன்பு.ஒறுத்தல் தர்மம் செய்தல் நிறைந்த உதவி புரியும்.

இது இயேசுவின் பாடுகளை நினைத்து ஒப்பாரி பாடுவதோடு ஓயக்கூடாது. நெற்றிச் சாம்பல் உனக்கு நினைவுபடுத்து மூடனே .....இன்று இரவும் உன் இதயத்துடிப்பு நின்று போகலாம். சிலுவை உன் மீட்பின் சின்னம் உன் அடிமையின் கால் கழுவ இப்போதே ஆயத்தமாகு. பொருளை அல்ல உன்னைப் பியத்துக் கொடுப்பது தான் உயிருள்ள அர்ப்பணம்.

"பாவம் இனிப்புத் தடவி கசப்பு" மனமாற்றம் .ஒப்பரவு. "கரும்பை நுணியில் இருந்து அடிநோக்கி உண்புத போன்றுத"சாவுக்குள்ளே வீடுகட்டிக்குடியிருப்பதினும் சில நிமிடத்துன்பங்கள் தாங்கித் தான் பாரேன். உனக்கு இன்னும் உயிர் வாழ மனம் மாற வாழ்க்கையை கொஞ்சம் இனிப்புச் சுவையோடு ஆனந்தமாய் வாழ்ந்து பார்க்க காலம் இருக்கு .ஏனெனில் இது உனக்கொன்றும் மரண தண்டனைக் கைதியின் கடைசி இரவு அல்லவே.

இறைவன் இயல்பாக இயற்கையின் மரணம் உனக்குத் தரும் வரை காத்திருந்து இன்பம் துன்பம் போதனை சாதனை போன்றவைகளை உன் வாழ்வில் அனுபவித்து அனுபவ வாழ்வாக உயர்ந்து மடிந்து முடிவதே வாழ்வாகும் ஆகவே

**இவைன் உன் வாழ்வை வழி நடத்துவாராக வென்று காத்திருந்து வாழ்வை நிறைவு செய்வாய்யாக.**

## *பாவங்கள் தீர்க்க*

பாவங்கள் தீர்க்க பரமனைப் பணிந்து
மரணத்தை அடைந்தாரே- சிலுவையில்
மரணத்தை அடைந்தாரே
மூன்றாம் நாளில் மரணத்தை வென்று
உயிர்த்து எழுந்தாரே - இயேசு
உயிர்த்து எழுந்தாரே
மண்ணகம் வருவாரே - இயேசு
மீண்டும் வருவாரே
மீட்புத் தருவாரே இயேசு
ஆட்சி செய்வாரே
மனிதா ! உன்னை ஆதரிக்கும்
உன் அன்னையை அன்பு செய்
உன்னை வழிநடத்தும்
உன் தந்தையை அன்பு செய்
உன்னை எதிர்க்கும் உன் பகைவனை அன்பு
செய்
உன்னைப் பாவத்திலிருந்து மீட்கும்
உன் இறைவன் ஒருவருக்கே பணி செய்

# புனித வாரம்

தவக்காலத்தின் ஆறாவது வாரம் புனித வாரமாக அனுசரிக்கப்படுகிறது. இது பரிசுத்த வாரம் என்றும் அழைப்படுகிறது. இறை மக்கள் இவ்வாரத்தில் ஏனைய வார நாட்களை விட மிகவும் அக்கறை யாக இருந்து தங்களுடைய ஆன்மீக காரியங் களையும் .ஒறுத்தல் முயற்சிகளையும் செய்வார் கள். சிறப்பாக கடந்த வாரங்களில் ஒறுத்தல் முயற்சி செய்தவர்களும் கூட இவ்வாரத்தில் தங் களை ஒறுத்து பாஸ்கா விழாவிற்கு ஆயத்தம் செய்வதை அவதானிக்கலாம். கிறிஸ்தவர்கள் தங்களுடைய அவசரமற்ற அவசியமற்ற செயற் பாடுகளை சற்று ஒதுக்கி விட்டு புனிதவார வழி பாடுகளில் பக்தியோடு கலந்து கொள்வார்கள். இவ்வாரத்தில் இறைமக்கள் வாழுகின்ற சூழலில் ஒருவித அமைதியையும்.பக்தி உணர்வையும் புத்து ணர்வையும் அதைவேளையில் சோக உணர்வை யும் அவதானிக்க முடியும்.ஆலயங்களிலும். இல் லங்களிலும் இசைக்கப்படுகின்ற 'பசாம்' கீதத்தை இக்காலத்தில் இறைமக்கள் கொண்டுள்ள உணர்வுபூர்வு ஈடுபாட்டின் வெளி அடையாளமாகக் காணலாம்.

புனித வாரம் ஆண்டவருடைய திருப்பாடுகளின் குருத்து ஞாயிறு அன்று ஆரம்பமாகிறது.கிறிஸ்து பெருமான் தமது பாஸ்கா மறைபொருளை நிறைவேற்ற எருசலேமிற்கு வருகை தந்ததை திருச்சபை இன்று நினைவு கூருகின்றது.வருடம் தோறும் பாஸ்கா விழாவைக் கொண்டாட இயேசு எருசலேமிற்கு வருவதுண்டு. ஆனால் இம்முறை தன்னையே பாஸ்காப் பலியாக நிறைவேற்றிட வருகிறார்.

இயேசுவும் அவருடைய சீடர்களும் எருலேம் நகருக்குள் நுழைந்த போது மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் பொங்க ஒலிவக்கிளைகளை உயர்த்திப் பிடித்து "தாவீது மகனுக்கு ஓசான்னா! ஆண்டவர் பெயரால் வருபவர் வாழி என்று அரச மரியாதை யுடன் வரவேற்பதைப் போன்று கிறிஸ்து வின் பதிலாளாய் விளங்கும் குருவானவரை இறை மக்கள் குருத்தோலைகளை தமது கையில் ஏந்தி மகிழ்ச்சியோடு வரவேற்று கிறிஸ்துவின் எருசலேம் வருகையை நினைவு கூருகின்றனர்.

## இன்றைய வழிபாடு

1.குருத்தோலைப் பவானி
**2.திருப்பலி என இருபகுதியைக் கொண்டுள்ளது**
3.குருத்தோலை **புனிதபபடுத்தும்** சடங்கு **நடைபெறும்** வேளையில் இயேசு எருசலேம் நகருக்குள் நுழைந்தமை தொடர்பான இறைவார்த்தைப் பகுதியை நற்செய்தியிலிருந்து குருவானவர் வாசிப்பார். பின்னர் மறையுரை ஆற்றுவர். திருப்பலியில் நற்செய்தி வாசகம் இயேசுவின் பாடுகளை சித்தரிக்கும் வரலாற்றுப் பகுதியிலிருந்து உரையாடல் முறையில் வாசிக்கப்படும்.இந்த புனித வாரத்தில் வியாழன் .வெள்ளி சனி ஆகிய புனித நாட்கள் மிகவும் முக் கியமான நாட்களாகும்.பாஸ்கா வியாழன் உச்சக் கட்ட வழிபாடு புனித வியாழனோடு ஆரம்பமாகி புனித சனி இரவோடு முடிவடைகின்றது.இந்த நாட் களில் நடை பெறும். வழிபாடுகள் மூன்று வேறு பட்ட வழிபாடுகள் அல்ல. மாறாக. அவை யாவும் ஓரேயொரு வழிபாடாகவே அமையும்.

## புனித வியாழன்

இந்த நாளில் ஆண்டவரின் இராவுணவு நிகழ்வை நினைவு கூறுகின்றோம்.திருச்சபையின் மிகப் பழ மையான வழக்கப்படி இறைமக்கள் பங்கு பெறாத திருப்பலிகள் எல்லாம் இன்று செய்யப்படும்.மாலை வேளையில் கடைசி இராவுணவுத் திருப்பலி இறைமக்கள் அனைவரும் முழுப் பங்கேற்க கொண் டாடப்படும்.இந்த நாளில் கிறிஸ்து அன்பின் அடையாளமாகவும். தமது உடனிருப்பை உணர்த் தும் அருட்சாதனமாகவும். உறவின் சின்னமாகவும். பகிர்வின் அடையாளமாகவும்.சமத்துவத்தின் சின்ன மாகவும். நற்கருணையை ஏற்படுத்தினார். சீடர்க ளின் பாதங்களைக் கழுவி அன்புக் கட்டளையை வழங்கினார். தமது பணி வாழ்வின் புனித கருவி யாக பணிக் குருத்துவத்தையும் ஏற்படுத்தினார். இன்றைய நாளின் வழிபாடுகள் நான்கு பகுதிக ளாக வகுக்கப்பட்டு நிகழ்த்தப்படுகிறது.

**நான்கு பகுதிகள்**
**1.இறைவாக்கு வழிபாடு**
**2.பாதம் கழுவுதல்**
**3.நற்கருணை வழிபாடு**
**4.நற்கருணை இடமாற்றப் பவனி என்பனவாகும்.**

நற்கருணை இடமாற்றப் பவனியானது நம் மீட்பரான இயேசு தம் திருத்தூதர்களுடன் ஜெஸ்தமெனி எனும் தோட்டத்திற்கு புறப்படுவதை நினைவு கூரும் வகையில் இடம் பெறுகிறது.**"ஒரு மணி நேரம் கூட என்னோடு விழித்திருக்க உங்களுக்கு வலுவில்லையா"** என்று கேட்க இயேசுவை இறைமக்கள் தனியாகவும் குடும்பமாக வும் குழுவாகவும் ஒன்று கூடி தரிசித்து ஆராதனை செய்வார்கள்.

## குறிப்பு :-

இந்த நாளில் திருத்தலம் மந்திரிக்கம் திருப்பலி காலையில் இடம்பெறும். திருப்பலியில் ஆயர் நோயாளிகளின் எண்ணையையும் திருமுழுக்கு ஆயத்தக்காரரின் எண்ணையையும் மந்தரித்து. கிறிஸ்மாத் தைலத்தைத் அர்ச்சிப்பார். ஆயரும் குருக்களும் கூட்டுத் திருப்பலியாக இத்திருப் பலியை நிறைவேற்றுவார். இது குருக்கள் ஆய ரோடு கொண்டுள்ள ஒன்றிப்பை வெளிப்படுத்திக் காட்டுகிறது. இன்று குருக்கள் தமது குருத்துவ

வாக்குறுதிகளை அனைவர் முன்பாகவும் புதுப் பித்துக் கொள்வார்கள்.இந்த திருத்தைலம் மந்திரிக் கும் திருப்பலி எமது மறைமாவட்டத்தில் குருக்க ளின் வசதி கருதி புனித திங்கள் மாலையில் இடம் பெறும்.

## புனித வெள்ளி

இந்த நாள் ஆண்டவருடைய திருப்பாடுகளை நினைவு கூரும் நாளாகும்."ஓசானா" என்று இயே சுவை வாழ்த்திய அதே மக்கள்"ஒழிக" என்று கோஷமிட்டு அநீதியாக தீர்ப்பிட்ட நாள். ஆனா ல்பாவங்களையும். சாபங்களையும். ஆனை த்து அநீதிகளையும் இயேசு தமது மரணத்தால் வெற்றி கொண்ட நாளும் இதுவே இறைசித்தத்தை நிறை வேற்ற சிலுவை மரணத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டநாளும் இதுவே.இன்றை நாளில் சிலு வைப்பாதைத் தியான வழிபாடு காலையில் அல் லது வசதியான நேரம் இடம் பெறும்.இன்றைய நாளில் ஒரு சந்தியும்.மாமிசத் தவிப்பும் அனுசரிக் கும் படி திருச்சபை இறைமக்களை அழைத்து நிக்கின்றது.

**இன்றைய நாளின் வழிபாடு பின்வரும் மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.**

**1.இறைவாக்கு வழிபாடு**
**2.திருச்சிலுவை ஆராதனை**
**3.திருவிருந்து**

ஆண்டவர் இயேசு தம்மையே வெறுமையாக்கியதன் அடையாளமாக இன்று பீடம் வெறுமையாக காட்சியளிக்கும். குருபீடத்தின் முன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து செபிப்பார்.இறைமக்களும் முழந்தாளிட்டு தமது பாவங்களுக்காக மனம் வருந்தி மன்னிப்புக் கேட்பார்.

## புனித சனி

இன்றைய நாள் பாஸ்காத் திருவிழிப்பு என்று அழைக்கப்படுகின்றது. தொன்று தொட்டே இவ் விரவு ஆண்டவருடைய வருகைக்காக விழித்திரு ந்து காத்திருக்கும் இரவாக இருந்து வந்துள்ளது. (யாத் 12:42) நற்செய்தியில் காண்பது போல் .ஆண்டவரின் வருகையை எதிர் கொள்ள எரியும் விளக்குகளுடன் ஆயத்தமாக இருந்தவர்கள் போன்று இன்றைய இரவில் இறைமக்கள் காத்தி ருப்பார். இங்கு ஒளி இறைவனைக்குறிக்கும் அடையாளக் குறியாக பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஏனெனில் ஒளியின் வடிவில் தான் இறைவன் முட்புதரில் மோசேக்கு காட்சி தந்தார். ஒளியின் வடிவில் தான் இயேசுவின் பிறப்பு அறிவிக்கப் பட்டது. இன்று புதுத் தீ புனிதப்படுத்தி பாஸ்காத் திரியில் ஏற்றப்படும். இங்கு ஒளியின் அடையாளம் இயேசுவின் உயிர்ப்பை உறுதிப் படுத்துகின்றது ஏனென்றால் " உலகின் ஒளி நானே "என்று இயேசு மொழிந்தார். பாஸ்காத்திரியில் காணப்படும் சிலுவை அடையாளம் மானிடம் முழுவதும் சிலுவையால் மீட்கப்பட்டதையும் அல்பா ஓமேக்கா என்ற கிரேக்க எழுத்துக்கள் இயேசு என்றென்லும் நிலையானவர் ஏன்ற கிரேக்க எழுத்துக்கள் இயேசு எனறென்லும் நிலையானவர் என்பதையும். எழுதப் பட்டிருக்கும் ஆண்டு இயேசு என்றென்லும் நிலை யானவர் என்றென்லும் நிலையானவர் என்பதையும் எழுதப்பட்டிருக்கும் ஆண்டு இயேசு காலங்களை யும் யுகங்களையும் கடந்தவர் மாட்சியும் ஆட்சியும் அவருக்கே உரியன. என்பதையும் குறிக்கின்றன. ஐந்து சாம்பிராணி மணிகளும். இயேசுவின் ஐந்து திருக்காயங்களை ஞாபகப் படுத்துகின்றன.

**இன்றைய வழிபாடுகள் நான்கு பகுதிகளைக் கொண்டுள்ளன.**

**1.திரு ஒளி வழிபாடு**
**2.இறைவாக்கு வழிபாடு**
**3.திருமுழுக்கு வழிபாடு**
**4.நற்கருணை வழிபாடு என்பனவாகும்.**

பாஸ்கா இரவு விடுதலையின் இரவு மனித குலம் மீட்புப் பெற்ற இஸ்ராயேல் மக்கள் தங்களுக்கு இறைவன் செய்த வல்ல செயல்களுக்காய் இறை வனுக்கு நன்றிப் பண் இசைத்தனர்.அதே விதமாக நன்றியை வெளிப்படுத்தும் முகமாக குருவானவர் பாஸ்காப் புகழுரையைப் பாடுவார்.
இன்றைய இறைவார்த்தை வழிபாடு மீட்பின் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. பழைய ஏற்பாட் டிலிருந்து ஒவ்வொன்றுமாக ஒன்பது வாசகங்கள் வாசிக்கப்படும்.

இவ்வேளையில் கிறிஸ்துவின் உயிர்ப்பை வெளிப் படுத்தும் முகமாக குருவானவரால் "உன்ன தங்களிலே "பாடப்படும். (ஆலயமணிகளும் ஒலிக்கும்.) தொடர்ந்து தண்ணீர் புனிதப்படுத் தப்பட்டு திருமுழுக்கு வாக்குறிதிகளை புதுப்பித்தல். இறைமக்களை புனித நீரால் புனிதப்படுத்தல் போன்ற நிகழ்வுகள் இடம் பெறும். மேலும் நற்கருணை வழிபாட்டின் மூலம் அன்னையாம் திருச்சபை கிறிஸ்துவின் பாடுகள். மரணம் உயிர்ப்பு ஆகிய பாஸ்கா மறை பொருளை பக்திச் சிறப்புடன் கொண்டாட அழைத்து நிற்கின்றது.
இத்தோடு புனித வியாழனோடு ஆரம்பித்த வழிபாடுகள் நிறைவு பெறுகின்றன. இக்கருத் துக்கள் அனைத்தையும் நன்கு உணர்ந்தவர்களாக புனித வார வழிபாடுகளில் பக்தியோடு பங்கு பற்றுவோம்.

உயிர்த்தெழுந்தார். உயிர்த்தெழுந்தார்
உயிர்த்தெழுந்தார். உயிர்த்தெழுந்தார்.
உயிர்த்தெழுந்தார்.

நம் ஆண்டவர் இயேசு
இயேசு இயேசு உயிர்ந்தெழுந்தார்.
கல்லறை இருளில் இருந்து
ஒளிக்கு அழைத்தார் அல்லேலூயா
சாவின் மீது என்றென்றும் வெற்றி கொண்டார்
அல்லேலூயா அல்லேலூயா அல்லேலூயா
ஆண்டவர் உயிர்த்தெழுந்தார் அல்லேலூயா.
சிலுவை சாவில் இருந்து வாழ்வைத் தந்தார்.

# அக மாற்றமே மனிதகுலத்தை மாண்புடையதாக உயர்த்தும்

“மாற்றமே மானிடத்தின் தத்துவம்”என்றான் ஒரு கவிஞன் நாம் எல்லோரும் மாற்றத்தை விரும்புகிறோம். மனித சிந்தனையே எண்ணற்ற மாற்றத்திற்கு வழிவகுக்கும். மாற்றம் இல்லாதிருந்தால் இவ்வுலகம் நில்லாது. அழிந்திருக்கும். நாம் காணும் விண்ணும் மண்ணும் கூட மாறாது.இருப்பவை போலக் கண்ணுக்கு தெரிகின்றுது. ஆனால் இது உண்மையன்று இவை சிறிது சிறிதாக மாறிக் கொண்டே இருக்கிறது.இது தான் உண்மை. எனவே இயற்கையோடு இணைந்த நாம் மாற்றத்திற்கு உட்பட்டவர்களாகி வளர்ந்து வாழ்ந்து வளமுடையதாக வாழ்வை மாற்றிக் கொள்வோம்.

மனித குலத்ததிற்கான மாற்றம் இரண்டு வகையில் ஏற்படுகிறது. ஒன்று அகமாற்றம்.மற்றது புறமாற்றம். ஒன்று கண்ணுக்கு புலப்படாதது. மற்றொன்று வெளிப்படையாக தோன்றும் வெளிமாற்றம். இவை இரண்டையும் தனிப்பட்ட வாழ்வில் ஆய்வுக்குட் படுத்தி ஆன்மீகவாழ்வில் .ஒழுக்க வாழ்வில் முன்னேறிச் செல்ல மனமாற்றத்தை ஏற்படுத்த காலத்திற்குக் காலம் நமக்கு அழைப்புவிடப் படுகின்றது. புற மாற்றத்தை வெளிப்படுத்துகின்ற ஞானச் செயல்கள் பலவுண்டு. அவற்றில் சில உண்ணாநோன்பு இருத்தல்.மரக்கறி உணவை உண்டு தம்மை கட்டுப்படுத்துதல்.காவி உடையணிந்து கடும்தவம் புரிதல். திருப்பலிக்கு ஒவ்வொரு நாளும் தவறாமல் செல்லுதல்.சிலுவைப்பாதை சொல்லுதல். வழிபாடுகளிலெல்லாம் பங்குகொள்ளுதல். திருத்தலம் நோக்கிய பயணங்கள். இவை எல்லாம் தேவை மிக மிக நல்லது. ஆனால் இந்த புறமாற்ற செயல்கள் நம் அகவாழ்வை மாற்றுகிற செயல்களாக இருக்க வேண்டும். புதிய மன மாற்றத்திற்கு புடமிடப்பட்டதாக. புதிய வாழ்வை நோக்கிப் பயணிக்க வேண்டும். இப்படியான புற நிலை செயல்கள் கண்ணுக்குப் புலப்படாத அக நிலை மாற்றத்தை முன்னேற்றத்தை ஏற்படுத்த வேண்டும். உடலின் மாற்றத்தை விட உள்ளத்து மாற்றம் தான் தேவை. அதில் தான நிலையான வாழ்வு அடங்கியிருக்கிறது என்பதை சிந்தித்து செயல்பட வேண்டும்.புறமாற்ற செயல்கள் அகமாற்றத்திற்கு இட்டுச் செல்ல வேண்டும். இல்லையென்றால் பயனற்றுது.

நாம் எல்லோரும் மாற்றம் ஏற்படவேண்டும். என்பதில் மிகவிருப்பம் கொண்டவர்கள் ஆன்மீக அரசியல் குடும்பத்தில். சமூகத்தில் இதில் நானும் ஒருவன் என்பதை எடுத்துவிடுகிறோம். அதனால் தான் விருப்பம் நிறைவேறுவதில்லை. உண்மையான மாற்றம் எங்கிருந்து வர வேண்டுமென்றால் முதலில் என்னில். அதுவும் அகத்திலிருந்து ஆன்மாவை தட்டி எழுப்புவதாக இருக்க வேண்டும்.

நாம் அடுத்தவரிடம் எதிர் பார்க்கிறோம்.அதனால் அக மாற்றத்தில் பின்னடைவு எற்படுகிறது. ஒரு திரைப்படத்தில் வருகிற நகைச்சுவை பாணியில் சில மாற்றத்தோடு சொன்னால் “ மாறும் ஆனா மாறாது” இப்படி எமது ஆன்மீக வாழ்வில் இருந்து விட கூடாது .புறமாற்றத்தை மற்றவர் களாலும் ஏற்படுத்தலாம். ஆனால் அகமாற்றம் மற்றவர்களின் அழுத்தத்தினால் அல்ல என்னுடைய விருப்பத்தினால் தான் ஏற்படுத்த வேண்டும். அது என் ஆன்மாவோடு தொடர்புடையது அதற்கு என் முழு விருப்பம் அவசியமானது. மாற்றவர்களால் திணிக்க முடியாது. ஆனால் புற செயலைக் கொண்டு அக மாற்றத்தை ஏற்படுத்த மற்றவர் களின் அறிவுரைகள் வழிகாட்டுதல்களை பின்பாற் றலாம். ஆகையால் நீங்கள் உங்கள் காணிக் கைகளை செலுத் தவரும் போது... முதலில் அவரிடம் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். பின்பு வந்து உங்கள் காணிக்கைகளைச் செலுத்துங்கள்.(மத்:5:23-24)

இந்தப் புறநிலை செயல் அகநிலை மாற்றத்திற்கு இட்டுச் செல்கிறது என்பதைஇறைவார்த்தை தெளிவுபடுத்துகிறது. இப்படி பலவற்றை வேதாகமத்தில் படிக்கலாம்.இயேசு சக்கேயுவை நோக்கி “இன்று இந்த வீட்டிற்கு மீட்பு உண்டாயிற்று”(லூக்19:9) என்றார். சக்கேயுவிடம் ஏற்பட்ட அகப்புறமாற்றத்தை இன்று யேசு நம்மிடம் எதிர்பார்க்கிறார்.”நீங்கள் உங்கள் உடைகளைக் கிழித்துக் கொள்ள வேண்டாம். இதயத்தைக் கிழித்துக் கொண்டு உங்கள் கடவுளாகிய ஆண்டவரிடம் திரும்பி வாருங்கள்” (யோவேல் 2:13)

நிறைவாக புறநிலை செயல்களோடு எம்மை மட்டுப்படுத்திக் கொள்ளாமல் அகநிலை செயல்கள் கடினமாக இருந்தாலும் ஆர்வத்தோடு மாற்றத்தை எற்படுத்தி முன்னேற வேண்டும்.மனதில் துாய்மை. வாழ்வில் நேர்மை.உண்மை நீதி ஒழுக்கத்தில்.

## இரண்டாம் அருளப்பர் சின்னப்பர்

பொதுவுடமைப் போலந்தில் மலர்ந்த பாப்பரசர் இரண்டாம் அருளப்பர் சின்னப்பர். மே மாதம் முதலாம் திகதி 2011ம் ஆண்டு வற்றிக்காணில் புனித பட்டம் பெறுகிறார் இவருடைய சரித்திர வரலாறு தாங்கிய புத்தகம் தமிழில் அச்சிடப் பட்டுள்ளது பத்து டொலர் மட்டுமே விரும்பியவர்கள் எமது தொலைபேசியில் தொடர்பு கொண்டு புத்தகத்தை கொள்வனவு செய்யும் வண்ணம் வேண்டுகிறோம். உங்கள் விளாசமும் தொலைபேசி இலக்கமும் பத்து டொலரும் காசோலையாக அனுப்பி வைத்தால் உங்கள் இல்லத்திற்கு புத்தகம் அனுப்பி வைப்போம். தோலை பேசி இலக்கம் **416 752 6999**.

# நீதிமொழிகள்

1.எண்ணங்களை மனிதர் எண்ணலாம். ஆனால் எதற்கும் முடிவு கூறுபவர் ஆண்டவா.

2.மனிதருடைய நடத்தையெல்லாம் அவர் பார்வையில களங்கமற்றதாய் தோன்றலாம் ஆனால் ஆண்டவர் அவர் உள்ளெண்ணத்தைச் சீர்தூக்கிப்பார்க்கின்றார்.

3.உன் செயல்களை ஆண்டவரிடம் ஒப்படை .அவற்றை வெற்றியுடன் நிறைவேற்றுவார்.

4.ஆண்டவர் படைக்க ஒவ்வொன்றுக்கும் குறிப்பிட்ட ஒரு முடிவு உண்டு. பொல்லாத மனிதரை அழிவு நாளுக்கென்று குறித்து வைத்திருக்கிறார்.

5.இறுமாப்புள்ளவர் யாராயிருந்தாலும் அவரை

ஆண்டவர் அருவருக்கிறார்.

அவர் தண்டணைகுத் தப்பவேமாட்டார் இது உறுதி.

6.அன்பும் வாய்மையும் தீவினையைப் போக்கும் .ஆண்டவரிடம் கொள்ளும்.அச்சம் ஒருவரைத் தீமையினின்று விலகச் செய்யும்.

7.ஒருவருடைய செயல்கள் ஆண்டவருக்கு உகந்தவையாயிருக்குமானால்.அவர் அவருடைய எதிரிகளையும் அவருக்கு நண்பராக்குவார்.

8.தீய வழியில் சம்பாதிக்கும் பெரும் பொருளைவிட நேர்மையோடு ஈட்டும் சிறு தொகையே மேல்.

9.மனிதா தம் வழியை வகுத்தமைக்கின்றார். ஆனால் அதில் அவரை வழிநடத்துபவரே ஆண்டவர்.

10.அரசன் வாயினின்று பிறக்கும் வாக்குப் பொய்க்காது. தீர்ப்பு வழங்கும் போது அவன் தவறு செய்யமாட்டான்.

11.நிறைகோலும் துலாக்கோலும் ஆண்டவருக்கே உரியன.பையிலுள்ள எடைக்கற்களெல்லாம் அவரால் உண்டானவை.

12.தீச்செயலை அரசர்கள் அருவருப்பார்கள்.ஏனெனில் நீதியே அரியணையின் உறுதியான அடிப்படையாகும்.

13.நேர்மையான பேச்சை அரசர் வரவேற்பார் நேரியவற்றைச் சொல்லுபவர்களிடம் அவர் அன்பு செலுத்துவார்கள்.

14.அரசரின் சீற்றம் மரண தூதன் போன்றது ஆனால் ஞானமுள்ளவர் அதைத் தணித்துவிடுவார்.

15.அரசரின் முகமலர்ச்சி வாழ்வளிக்கும். அவரது கருணை பருவமழை பெய்யும் மேகம் போன்றது

16.பொன்னைவிட ஞானத்தைப் பெறுவதே மேல். வெள்ளியைவிட உணர்வைப் பெறுவதே மேல்.

17.மனவலிமை நோயைத் தாங்கிக் கொள்ளும் . மனம் புண்பட்டால் அதைக் குணப்படுத்த யாரால் இயலும்.

18.அகமகிழ்ச்சியால் முகம் மலரும். மனத்துயரத்தால் உள்ளம் உடையும்.

19.என்னைத்தேடி அடையாதோர் தமக்குக் கேடு வருவித்துக் கொள்வார். என்னை வெறுக்கும் அனைவரும் சாவை விரும்புவோர் ஆவர்.

20.நேர்மையானவர்களின் நேர்மை அவர்களின் வழியை நேரக்கும்.பொல்லார் தம் பொல்லாங்கினால் வீழ்ச்சியுறுவார்.

## தமிழில் ஞானொடுக்கம்

சித்திரை மாதம் 9ம் திகதி புனித லூர்து மாதா ஆலயத்தில் மாலை
4.00 மணி தொடக்கம் 9.00 மணி வரையும் நடைபெற்ற ஞானொடுக்கத்தில் அருட்தந்தை எட்வேட் ராஜன் அவர்களும் சகோதரன் பிரான்சிஸ் அவர்களும் கலந்து சிறப்பித்தார்கள்.அவற்றில் தவசுகால சிந்தனைகள் .சிலுவைப் பாதை தியானம். ஒப்புரவுசடங்கும். திருப்பலியும் நிறைவேற்றப்பட்டது விசேடமாக பங்குகொண்ட முதியவர்கள் தங்களின் அனுபவங்களை மிகவும் ஆர்வத்துடனும் தெளிவாகவும் பகிர்ந்து கொண்டார்கள். இவற்றில் இறைவன் தபசுகாலத்தில் எங்களுடன் இருக்கிறார் எங்களின் ஒவ்வொரு செயல்களிலும் அவரது பிரசண்ணம் எங்களுக்கு உறுதுனையாக இருக்கிறது ஆகவே நாம் செய்யும் தபசு கால நல் முயட்சிகளினால் நாம் மகிழ்ச்சியடையவேண்டும் என்று கருத்துக்களையும் அனுபவங்களையும் பகிர்ந்து கொண்டார்கள். திருப்பலியில் 10 திகதிக்குரிய நட்செய்தி வாசகத்தின் தெளிவுரையாக இறைவனின் பிரசண்ணத்தின் முக்கியத்துவம் பற்றியும் அவரின் மகிமைவிளங்க இயேசு லாசரை உயிர்ப்பித்த சம்பவம்பற்றியும் தியாணித்து திருப்பலி ஒப்புக்கொடுத்து மிக்க மகிழ்ச்சியுடன் ஞானொடுக்கம் நிறைவேற்றப்பட்டது பங்கு கொண்டவர்கள் அனைவருக்கும் நன்றி.

# தூய ஆவியினுடைய தெய்வீக பலன்கள்

**"தூய ஆவியின் கனிகள் அன்பு.மகிழ்ச்சி.அமைதி. பொறுமை.பரிவு. நன்னயம். கனிவு. தன்னடக்கம் என்பவையாகும். இவையுள்ள இடத்தில் திருச்சட்டத்திற்கு இடமில்லை."**
(கலா 5:22.23)

நம்முடைய வாழ்க்கையில் அதிக பலமாக கடந்கு வருகின்ற சந்தர்ப்பங்கள் உண்டு. அப்படியான சந் தர்ப்பங்களில் பலாத்காரமாக ஒன்றுமே தான் செய் வதற்கு முடிந்ததென்று வராது. "யோவு" என்னும் நூலில் பார்த்தோமேயானால் சாத்தான் யோபைச் சோதித்த கால கட்டத்தில் யோபுக்கு எதுவுமே செய்வதற்கில்லை. ஒவ்வொரு வினாடியும் துன்பங் கள் ஒன்றின் பினனால் ஒவ்வொன்றாக வந்து கொண்டிருந்துத. ஆனால் இந்த துன்பத்தின் கால கட்டத்தில் யோபு ஒரேயொரு காரியம் மாத்திரந் தான் செய்தது. யோபுவினுடை நூல் 22:21 ல் அது தெளிவாக குறிக்கப்பட்டுள்ளது ஆண்டவ ருடன் சமாதானத்தில் ஆண்டவரோடு ஒன்றித்திருப் பது எவ்வளவோ மிகமுக்கியமான காரியமாகும். வாழ்க்கையில் எந்த நிலையிலும் இந்த ஒற்று மையில் வாழ்வதற்கு நமக்கு இயலும். யோவான் நற்செய்தி 15-ஆம் அதிகாரத்தில் திராட்சைச் செடியினுடைய கொடிகளில் எவ்வாறுதான் கனித ருகின்றதென்று விளக்கம் தருகிறது.

**"கொடி திராட்சைச் செடியோடு இணைந்து இருந்தாலன்றித் தானாக கனி தர இயலாது. ஆத போல நீங்களும் என்னோடு இணைந்திருந்தாலன் றிக் கனிதர இயலாது"(யோவான் 15: 4)**

முழுவதும் "நீங்களும்" என்னோடு "இணைந்து இருங்கள்" என்று திரும்பத் திரும்ப சொல்லியிருக்க றார். "இணைந்து இருங்கள்" ஏனும் வார்த்தை யோவான் 15-ஆம் அதிகாரத்தில் ஒன்று முதல் பத்துவரையுள்ள வாக்கியங்களில் ஆறு முறை பயன்படுத்தியுள்ளார். ஆண்டவரோடு கூடுவே இணைந்து இருப்புத என்புத ஆண்டவருடைய அதிமகத்துவமான அழைப்பும் நற்செய்தியைப் பறைசாற்ற அனுப்பப்படவும் நியமிக்கப்பட்டதாகும். (மாற்கு 3:14) இது தூய்மை நோக்கியும் பாவ உள்ள அழைப்பாகும்.வேறெந்த ஒரு இந்த அழை ப்பும் கூப்பிடுவதும் எவ்வளவோ மேலானதாகும். நம்முடைய வேலையின் மகத்துவமோ தனித் தன் மையோ காரணம் இந்த அழைப்பிலிருந்து விலகிட வேண்டுமென்று எவருக்கும் சொல்ல இயலாது. தூய்மை கடைப்பிடிப்பதிலிருந்து தானாக விலகி விடுவதற்கு யாராலும் இயலாது. தானாக தூய்மை யாக்கப்படாத ஒர நபராலும் ஒன்றுமே தான் இவ்வுலகில் செயல்பட இயலாது. பிதாவுடைய சித்தம் இயேசு பூமியில் நிறைவேற்றினது தானாக தூய்மையாகிக் கொண்டே தான்

**"அவர்கள் உண்மையினால் உமக்கு உரியவர் ஆகும்படி அவர்களுக்காக என்னையே உமக்கு அர்ப்பணமாக்குறேன். (யோவான் 17:19)**

இயேசு பிதாவில் வாழ்ந்து கொண்டு தான் இந்த அர்ப்பணம் சாதித்து தூய்மையான வாழ்விற்குள் அசாதாரணமான ஆன்மீக பலம் ஆண்டவரில் வாழ்கின்ற அனுபவதம் வழியாக மட்டுமே தான் கிடைக்கும்.ஆன்மாவினுடைய தெய்வீக பலன்கள் தோற்றுவிப்பதற்கு இயலுகின்ற மரங்களாகும் படியாக ஆண்டவர் நம்மை அழைத்திருக்கிறார்.

## அருட் தந்தை எட்வேட் ராயன்.

பங்குனி மாதம் 2008ம் ஆண்டு கனடா வருகை தந்திருந்த தந்தை எட்வேட் ராயன் கப்பூச்சின் பிறான்சிஸ்க்கன் சபையைச் சேர்ந்த மிஷனறி ஆவர், அவர் ரொறொன்ரோவில் இறையியல் முது கலை பட்டப் படிப்பில் ஈடுபட்டிருந்தபோது ரொறொ ன்ரோ வாழ் தமிழ் சமூகத்தில் நிகழ்ந்த பல சமய சமூகப் பணிகளில் ஆர்வத்துடன் பங்கு கொண்டு பணியாற்றினார் பல திருயாத்திரைகள், மரணசடங் குகள், திருமணங்கள். திருவிழாக்கள், தொலைக் காட்சியிலும், வானொலி நிகழ்ச்சிகளிலும் இவர் பணியாற்றிய முக்கிய சடங்குகள் ஆகும் அருட் தந்ததை எட்வேட் ராயன் அவர்கள் கனடிய தமிழ் மக்களின் தேவைக்கேற்ப பல மறையுரைகளையும் விசுவாசப் பரப்புதல்களையும் தமிழ் மக்கள் செவி மடுக்கச் செய்துள்ளார். பல குடும்பங்களின் ஆலோசராக அவர்களின் தேவைக்கேற்ப அவர்க ளின் இல்லங்கள் தரிசித்து ஆலோசனைகள் வளங்கி அக்குடும்பங்களின் பிணக்குகளைத் தீர்க்க உறுதுனையாக இருந்துள்ளார். அவர் இங்கு வசித்த மூன்றரை வருடத்திலும் தனது படிப்பையும் தனது சபையின் கடைமைகளையும் நிறைவேற்றிக் கொண்டு தனக்குக் கிடைக்கும் எஞ்சிய நேரங்க ளில் தேவை ஏற்படும்போதெல்லாம் அங்கு செவை வளங்க காத்திருந்து பணிபுரிந்துள்ளார் என்றால் அது மிகை ஆகாது இவரது படிப்பை நிறைவு செய்து கொண்டு இவர் இந்தியா செல்ல இருக்கி றார் என்று அறிந்து புனித லூர்துமாதா தேவால யத்தில் இவருக்கு பிரியாவிடை வழங்கப்படுகிறது அத்துடன் இந்திய கத்தோலிக்க திருச்சபை அருட் தந்தை எட்வேட் ராயன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமிருக்கிறது அங்கு இலவச குடும்பச்சட்ட உதவி மையத்தில் இவர் பணியாற்ற வருகிறார் என்று வரவேற்கிறது.

# நோய் நீக்கும் செபம்

ஆண்டவரின் பெயரைச் சொல்லி வேண்டுவோர் யாவரும் தப்பிப்பிழைப்பார். (திரு2:21 ) "நானே உன்னைக் குணமாக்கும் ஆண்டவர்" (விப 15: 26) என்று அருள் பொழிந்த தந்தையாம் இறைவன் தம் ஒரே மகனான இயேசுவின் திருப்பெயரைச் சொல்லி மன்றாடும் அனைவருக்கும் நலமளிக்க விரும்புகிறார்.
உடல் உள்ளம் .ஆன்மா நலம் அருளைக் காத்திருக்கிறார்.

**நிபந்தனைகள்**

1.பாவங்களுக்காக மனம் வருந்துதல்
2.அனைவரையும் மனப்பூர்வமாக மன்னித்தல்
3.எல்லாத் துன்பங்களுக்காகவும் இறைவனைத் துதித்தல்.
4.தூய ஆவியால் ஆட்கொள்ளப்பட செபித்தல்.
5.தங்களுக்காக மட்டுமன்றி பிறருக்காகவும் வேண்டுதல் செய்தல். அப்போது ஆண்டவர் ஆசீர்வதிப்பார்.நோய்களை நீக்குவார்.

**செபம்**

ஆண்டவரே! எனது நோய்க்காக நான் உமக்கு நன்றி கூறுகிறேன்.உம்மைப் போற்றுகிறேன். ஊமது தூய ஆவியாலும் தூய அன்பாலும் வார்த்தைகளாலும் ஞானத்தாலும் என்னை நிரப்பியருளும்.!

ஏமது துன்பங்களைக் குறித்துள்ள உமது உயர்வான எண்ணங்களை வெளிப்படுத்தியருளும். தூய ஆவியால் என்னை நிரப்புவீராக.!

இயேசுவே எனது வேதனைகளை உலகிலுள்ள எல்லாப் பாவிகளின் மனந்திரும்புதலுக்காக தான் அர்ப்பணம் செய்கின்றேன்.!

தந்தையாம் இறைவா இவ்வுலகில் துன்புறும் அனைவரையும் உமது தூய ஆவியால் நிரப்பியருளும். அவர்களை உமது வார்த்தையால் நிரப்பி இயேசுக் கிறிஸ்துவின் ஊழியர்களாக ஏற்றுக் கொள்வீராக! அவர்களது நோய்களை அற்புதமாகக்
குணமாக்குவீராக!

தந்தையாம் இறைவா! இவ்வுலகில் துன்புறும் அனைவரையும் உமது தூய ஆவியால் நிரப்பியருளும். அவர்களை உமது வார்த்தையால நிரப்பி இயேசுக் கிறிஸ்துவின் ஊழியர்களாக ஏற்றுக் கொள்வீராக! அவர்களது நோய்களை அற்புதமாகக் குணமாக்குவீராக.

தந்தையாம் இறைவா! உமது திருமகன் இயேசுக் கிறிஸ்துவின்
திருப்பெயரால் உலகெங்கும் அற்புதம் செய்வீராக.

நான் மனம் கலங்க மாட்டேன்.மன வேதனைப்படமாட்டேன்.ஆண்டவர் என்னுடன் இருக்கிறார்.அச்சம் மற்றும் கவலையின் தீய ஆவிகளே இயேசுக் கிறிஸ்துவின் பெயரால் இங்கிருந்து விலகிச் செல்லுங்கள்.அஞ்சா நெஞ்சத்தின்
தூதரே என்னை நிரப்பியருளும்.

இயேசுக்கிறிஸ்துவின் திருப் பெயரின் வல்லமையால் .அவரது தூய இரக்கத்தின் வல்லமையால் எல்லாத் துன்பங்களும் நோய்களும் விலகுவதாக ! அவை கல்வாரி சிலுவையின் பாரத்தால் நொறுக்கப்படுக.

இயேசுவே! தோத்திரம் இயேசுவே நன்றி .மரியே வாழ்க.
(ஒவ்வொரு செப மன்றாட்டையும் பலமுறை சொல்லி செபிக்கவும்.பிறருக்கும் சொல்லிக் கொடுக்கவும்.

## மனநோய் உடல் நோய்க்கு மருந்து வாய்விட்டு சிரித்தர்ல் நோய்விட்டுப் போகும்.

ஒருவர் : உங்க முன்னாடி நான் உட்கார நீங்க தான் டொக்டர் காரணம்

டொக்டர் : என்ன அப்படி பெரிசா செய்திட்டேன்?

ஒருவர் : நல்லா இருந்த காலை ஆப்ரேஷன் செய்து நடக்க முடியாம உட்காரவச் சுட்டிங்களே!

பொலீஸ் :- முணு நாளை உங்க மனைவியைக் காணலைன்னு சொல்றீங்களே!
எல்லா இடத்திலேயும் தேடினீங்களா?

வுந்தவர் :- இன்னும் 10 ஜவுளிக்கடை பாக்கி இருக்குது சார்

நோயாளி :- என் ஆப்பிரேசனுக்கு முன்பு நான் எல்லோரையும் பார்க்க விரும்புகிறேன் டாக்டர்

டாக்டர் :- பரவாயில்லை ஆப்பிரேசன் முடிந்ததும் எல்லோரும் உன்னைப் பார்த்து விடுவார்கள்

மேனேஜர் :- ஆபிஸ்ல இருக்கிறதே பத்து பேர்தான் அதுல அஞ்சு பேர் லீவுன்னா
என்னப்பா ஆகும்?

க்ளர்க் :- குறட்டைச் சத்தம் குறைந்து விடும்சார்.

மகன் :- வயதாகி விட்டால் தான் காரை மெதுவாக ஓட்டுகிறீர்களா?

தந்தை :- ஆமாம் .கர்ருக்கு

தாய் : வயிற்று வலி என்றால் வயிற்றில் ஒன்றும் இல்லை என்று அர்த்தம்

மகன் : அப்படியானால் ஏன் வாத்தியார் அடிக்கடி தலைவலி என்கிறார் அவருக்கு
தலையில் ஒன்றும் இல்லை என்று
ஆர்த்தமா அம்மா?

ஆசிரியர் :- நாய் படம் வரையச் சொன்னால் வெறும் பேப்பரை காட்டுகிறாயே

மாணவன் :- வரைந்தேன் சார் நீங்கள் தடியை எடுத்து வுருவமு் புயுந்த ஓடி விட்டது

# WISHING YOU A HAPPY EASTER!
## - GRAND CAR WASH (LOUIS)






*HAND CAR WASH*
*PROFESSIONAL AUTO DETAILING*

**752 WARDEN AVE.**
**SCARBOROUGH, ONT.**
**M1L 4A1**
(3 Blocks South of Eglinton)

***CONTACT: LOUIS***
**TEL: 416-757-8200**
**CELL: 647-831-2709** *(Tamil)*

*Email: info@grandcarwash.ca*
*Website: www.grandcarwash.ca*

Our aim is to satisfy the customers ● Quality work for reasonable prices!

**We Also Sell Used Vehicles Within Your Budget!**
**Returning a Leased Vehicle?**
**Come to Us and We'll save you $$$$$$$$$$!!!!!!!!!!!**

உங்கள் வாகனத்தில் படிந்திருக்கும் துசி, அழுக்குகள் உங்கள் சுவாசத்திற்கு கேடு விளைவிப்பது மட்டுமல்லாமல் பல உவாதைகளையும் குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் ஏற்படுத்துகின்றது.

ஒவ்வாமை தொய்வு சுவாச சம்பந்தமான பிரச்சனை, மூக்கடைப்பு போன்ற உவாதைகளை தடுப்பதற்கு ஆரம்ப கட்டமாக உங்கள் வாகனங்களை சுத்தமாக வைத்திருங்கள்.

**We Specialize In:**
Interior / Exterior. Vaccum & Shampoo. Leather Treatment. Polishing. Waxing. Detailing. High Speed Buff. Rust Protection. Under Coating. Body Repair. Oil Change. Brake Change. Any Mechanical Problems.

**Contact: B. Louis**
**Tel: 416.757.8200 - Cell: 647.831.2709**
**Web:** www.grandcarwash.ca **E-Mail:** info@grandcarwash.ca
752 Warden Avenue (3 Blocks South of Eglinton), Scarborough, ON M1L 4A1